[8th September 1960

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) An expert Committee has been constituted to advise the Government in the matter of setting up of a College and imparting instructions at degree level in Ayurveda, Siddha and Unani in the said college.

(*b*) to (*d*) All these questions will be considered after the report of the Committee is received by Government.

SRI A. VEDARATHNAM : இந்தக் கல்லூரிகளில் பயிற்சி பெறுவதற்கு என்ன தகுதி இருக்க வேண்டும் ? அப்படி தகுதி பெற்றவர்கள் பயிற்சி பெற்ற பின் அவர்கள் எம்மாதிரியான வேலைகளில் எங்கே அமர்த்தப்படுவார்கள் என்பதை தயவுசெய்து அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதெல்லாம் இந்தக் கமிட்டி ரிப்போர்ட்டு வந்த பிறபாடுதான் எதெது எப்படிச் செய்யலாம் என்பதைப்பற்றி யோசனை செய்ய முடியும்.

*Co-operative farms*

*540 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் கைத் தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959–60-ல் வாரம் பயிரிடும் விவசாயிகளின் கூட்டுறவு பண்ணைகள் எந்தெந்த இடங்களில் ஆரம்பிக்கப்பட்டன ?

(ஆ) இதில் (1) கோவில்கள், (2) மடங்கள், (3) தரிசு நிலங்கள், (4) தனிப்பட்டவர்கள் முதலிய நிலங்களில் ஆரம்பிக்கப்பட்டவை எத்தனை ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) & (ஆ) A statement[a] is placed on the table of the House.

SRI S. M. ANNAMALAI : இந்த வாரம் பயிரிடுபவர் கூட்டுறவு சங்கமானது நல்ல முறையில் வேலை செய்கிறதா ? மற்ற நிலங்களில் விளைகிறதைவிட இங்கே அதிகமாக விளைகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : நல்ல முறையில் வேலை செய்கிறது என்பதுதான் சர்க்காருடைய அபிப்பிராயம். இதில் ஈடுபட்டிருக்கக்கூடியவர்களுடைய அபிப்பிராயமும்கூட. முப்பத்தேழு சொஸைடிகள் இப்போது ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கின்றன. நடைமுறையில் எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக வந்துவிடும்.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN: சாகுபடியாளர் கூட்டுறவு சொஸைடிகள் ஆரம்பிக்கப்பட்டிருக்கிற இடங்களில் உணவு உற்பத்தி அதிகப்பட்டிருக்கிறதா? அதே நேரத்தில் அங்கே சாகுபடி செய்யக் கூடியவர்களுடைய பொருளாதாரம் உயர்த்திருக்கிறதா ? அப்படி முன்னேற்றம் காணப்பட்டால் மேலும் அதை விஸ்தரிக்க வழி உள்ள இடங்களில் சாகுபடியாளர் சொஸைடியை அமைக்க சர்க்கார் முன் வருமா?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினருடைய கேள்விதான் அவருடைய அபிப்பிராயம். அதைப் பல முறை சர்க்காரிடத்தில் அவர் எடுத்துச் சொல்லியிருக்கிறார். பொதுவாக இந்தக் கூட்டுறவு சொஸைடிகள் நன்றாக நடக்கிறது என்பதுதான் சர்க்காரின் அபிப்பிராயமும்கூட. அதை விஸ்தரிக்க சர்க்கார் போதிய முயற்சிகள் எடுத்துக்கொள்ளும்.

[a] Printed as Appendix II on pages 493—495 infra.

[8th September 1960

Sri S. M. ANNAMALAI : தனிப்பட்டவர்களுடைய நிலங்களில் ஒரு கூட்டுறவுப் பண்ணைகூட ஆரம்பிக்கப்படவில்லை. அதற்கு நேரிடையான காரணம் என்ன ? நிலக்காரர்கள் ஒத்துக்கொள்ளவில்லை என்பதா ? அப்படியாயின் அவைகளைக் கூட்டுறவுப் பண்ணையின்கீழ் கொண்டுவர என்ன உத்தேசம் வைத்திருக்கிறார்கள் ?

The Hon. Sri R. VENKATARAMAN : நிலச் சொந்தக்காரர்கள் ஒத்துக்கொண்டால் அங்கும் கூட்டுறவுப் பண்ணைகளைக் கொண்டு வரலாம். சர்க்கார் கட்டாயப்படுத்தி ஆரம்பிக்க சட்டம் இடம் கொடுக்காது. அப்படிச் செய்யவேண்டுமென்றால் சட்டமே இயற்றியாகவேண்டும். அதனால் எல்லாவிதமான தொல்லை தொந்தரவுகளும் வரும்.

Sri K. R. NALLASIVAM : தனித் தன்மை வாய்ந்த அப்படிப் பட்டவர்களுடைய நிலம் என்றாலும் கோயில், மடாலயம் சம்பந்தப் பட்ட நிலமாக இருந்தாலும் அதன் தன்மை ஒன்றுதானே.

The Hon. Sri R. VENKATARAMAN : எதுவாக இருந்தாலும் ஒன்றுதான்.

Sri P. G. MANICKAM : மேஜைமீது வைக்கப்பட்டிருக்கிற குறிப்பிலே தஞ்சாவூர் ஜில்லாவில்தான் மடங்கள் கோயில்கள் சம்பந்த மான நிலங்கள்வரையில் கூட்டுறவுப் பண்ணைகள் ஏற்பட்டிருக்கின்றன. இதர ஜில்லாக்களிலும் இதுபோல் செய்ய ஏற்பாடு செய்யப்படுமா ?

The Hon. Sri R. VENKATARAMAN : எந்த எந்த இடங் களில் இந்த மாதிரியாக நிலங்கள் இருக்கின்றனவோ அங்கெல்லாம் கூட்டுறவுப் பண்ணைகள் அமைக்க கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. இதில் அங்குள்ளவர்களும் ஊக்கம் காட்டி வருகிறார்கள். அப்படி முன் வருகிறவர்களுக்கு சர்க்கார் வேண்டிய உதவி செய்யும்.

Sri K. VINAYAKAM : May I know, Sir, what exactly does the Hon. Minister mean by the phrase 'satisfactorily working'. Does it mean that the yield has increased or the output has increased from what it was before these Tenants Co-operative Societies were formed?

The Hon. Sri R. VENKATARAMAN : That is what is claimed by the societies. If the hon. Member wants to verify he must put a separate question.

Sri T. T. DANIEL : May I know, Sir, whether any financial aid the Government is giving to the cultivating tenants of the co-operative farms and may I also know whether the tenants should be actually landless so that they can be members of the co-operative societies?

The Hon. Sri R. VENKATARAMAN : So far as the latter part of the question is concerned, it differs with the nature of the society, for instance, in a Land Colonization Society a member should be a landless peasant and for the other society he must be a cultivating tenant. So far as subsidies are concerned, Government give to the Tenant Farming Societies Rs. 250 per member cultivating 3 acres, half loan and half subsidy, and if it is less than 3 acres then the subsidy and loan will be reduced to Rs. 150. Other privileges are also given.

8th September 1960]

SRI M. D. THIAGARAJA PILLAI : தஞ்சை ஜில்லாவில் இதுபோன்று கூட்டுறவு சாகுபடி பண்ணைகளை வைத்து நடத்துவதற்கு நமது சர்க்கார் ஏதாவது விசேஷ சலுகைகளைக் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அப்படிப்பட்ட ஏதாவது யோசனையைச் சொன்னால் அதை சர்க்கார் பரிசீலனை செய்யும்.

SRI S. M. ANNAMALAI : தனிப்பட்டவர்கள் நிலங்களில் கூட்டுறவு பண்ணையை ஆரம்பிக்க வேண்டுமானால் அவர்களுடைய சம்மதத்தைப்பெற்று ஆரம்பிக்கவேண்டும் என்று சொல்லப்படுகிறது. அதே சமயத்தில் ஆப்செண்டி லாண்ட்லார்ட் இருக்கிறார்கள். அவர்களுடைய நிலங்கள் சரிவர பயன்படுத்தப்படாமல் இருக்கின்றன. உணவு உற்பத்தியை அதிகரிக்க வேண்டும் என்று சொல்லக்கூடிய காலத்தில் அவர்கள் சரிவர சாகுபடி செய்யாமல் இருப்பதன் காரணமாக அவர்களுடைய நிலங்களையும் எடுத்து கூட்டுறவு சாகுபடிக்குக் கொண்டுவர சர்க்கார் முயற்சிக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அதைத்தான் நான் முதலில் சொன்னேன். அம்மாதிரி எடுத்துக்கொள்வதற்கு எந்தச் சட்டத்திலும் இடம் கிடையாது. ஒருவருடைய நிலத்தையோ அல்லது ஒருவருடைய சொத்தையோ நாம் எடுத்துக்கொள்வது என்று சொன்னால் அதற்கு நாம் தனியாக சட்டம் இயற்றவேண்டும். அதுவும் அரசியல் சட்டத்திற்கு உட்பட்டதாக இருக்க வேண்டும். அவர்களுக்கு காம்பன்சேஷன் கொடுத்துவிட்டுதான் எடுத்துக்கொள்ள வேண்டும். அதைக் கொடுத்துவிட்டு அதன் பிறகு அப்படி எடுத்துக்கொண்டு செய்வதில் லாபகரமாக இருக்குமா என்பதையெல்லாம் பார்த்துத்தான் செய்யவேண்டியதாக இருக்கிறது.

SRI A. VEDARATHNAM : ஆலய நிலங்களையும் மடங்களின் நிலங்களையும் டெனண்ட் பார்மிங் சொசைட்டிகளுக்குக் கொடுப்பதில் பலவிதமான சொஸைடிகளுக்குக் கிடைக்கவில்லை என்ற புகார் வந்திருக்கிறது. அவைகளை கனம் அமைச்சரிடம் நேரிலும் சில விண்ணப்பங்கள் மூலமாகவும் தெரிவித்திருக்கிறார்கள். மேஜையின் மீது வைக்கப்பட்டிருக்கிற அறிக்கையின் 24-வது ஐட்டம் வேதநாயகி டெனண்ட் பார்மிங் கோவாபரேடிவ் சொசைட்டி, 27-வது ஐட்டம் வேதாரண்யம் கோவாபரேடிவ் சொசைட்டி, 44-வது ஐட்டம் கரியப்பட்டினம் டெனண்ட் பார்மிங் கோவாபரேடிவ் சொசைட்டி, இவைகள் ரிஜிஸ்தர் ஆகி ஒரு வருஷ காலமாகியும் கூட விவசாய காலம் முடிவு ஆகப்போகிற காலம் ஆகியும் கூட இன்னும் அவைகளை எந்த விதமான முறையிலும் கவனிக்கவில்லை என்று கூறுகிறார்கள். அதனால் அவைகளுக்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : புதியதாக அமைப்பதில் சற்று காலதாமதம் தான் ஆகிறது. ஏனென்றால் இப்பொழுது புதியதாக சொசைட்டிகளை ஆரம்பிக்கப்படுவதால் அவைகளைப்பற்றியெல்லாம் பரிசீலனை செய்ய வேண்டியதாக இருக்கிறது. அதனால் ஆரம்ப காலத்தில் சற்று காலதாமதம் ஆகிறது. இப்பொழுதுள்ள அனுபவத்தைக் கொண்டு இனிமேல் காரியங்கள் நடைபெறும் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

SRI K. B. S. MANI : தஞ்சை ஜில்லாவிலுள்ள தருமபுர திருவாடுதுறை ஆதீன மடாதிபதிகள் சர்க்காருடைய நிபந்தனைகளை ஒத்துக்கொண்டு சர்க்காருடன் ஒத்துழைப்பதாகக்கூறி பல நிலங்களைக் கொடுத்திருப்பதால் மேற்கொண்டு அவர்களை ரிக்வெஸ்ட் செய்து இன்னும் அதிகப்படியான நிலங்களைக் கொடுக்கும்படியாகச் செய்து அவைகளையும் கூட்டுறவு சாகுபடிக்குக் கொண்டு வருவதற்கு அவர்களை கேட்டுக்கொள்வார்களா ?

[8th September 1960

THE HON. SRI R. VENKATARAMAN : அதைப்பற்றி தான் நாங்கள் அடிக்கடி வற்புறுத்திக்கொண்டு வருகிறோம். கனம் விவசாய இலாகா மந்திரி அவர்கள் இது விஷயமாக அதிக ஊக்கம் எடுத்துக் கொண்டு அவர்கள் போகிற இடங்களிலெல்லாம் மடங்கள் கோவில்கள் நிலங்கள் இருக்கிற இடங்களில் இதைச் செய்ய வேண்டும் என்று வற்புறுத்திக்கொண்டு வருகிறார்கள்.

SRI V. SUBBIAH : இப்படி கூட்டுறவு முறையில் இல்லாமல் தனிப்பட்ட விவசாயிகள் எல்லோரும் சேர்ந்து கூட்டுறவு முறையில் விவசாயம் செய்கிறோம் என்று சொல்லி சர்க்காரை சலுகைகள் கேட்டால் அவர்களுக்கு அவசியமான சலுகைகளைக் கொடுக்க சர்க்காருக்கு ஏதாவது உத்தேசம் இருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : தனிப்பட நிலம் வைத்துக் கொண்டிருக்கிறவர்கள் கூட சேர்ந்து கூட்டுறவு இயக்கத்தில் சாகுபடி செய்ய வேண்டும் என்பதுதான் சர்க்காருடைய விருப்பமும். அப்படிச் செய்ய யார் முன் வந்தாலும் அவர்களுக்கு சாகுபடி செய்வதற்கு வேண்டிய சலுகைகள் எல்லாம் கொடுக்கப்படும்.

SRI S. M. ANNAMALAI : தனிப்பட்டவர்களுடைய நிலங்களில் சில ஏறத்தாழ மூன்று ஆண்டுகளாக தரிசாக கிடக்கிறது. லாண்ட் யூடிலைசெஷன் ஆக்ட்படி" அவைகளை சாகுபடி செய்யச் சொல்ல சர்க்காருக்கு அதிகாரம் இருக்கிறது. இந்த நிலைமையில் சிலர் ஒரு வருஷம் சாகுபடி செய்து விட்டு இரண்டு வருஷம் சாகுபடி செய்யாமல் இருக்கிறார்கள். அப்படி இருந்தால் அவர்களை சாகுபடி செய்யச் சொல்லும் அளவுக்கு சட்டத்தைத் திருத்தி அமைக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ? அப்படி பயிரிடாமல் இருந்தால் அந்த நிலங்களை சட்டப்படி எடுத்துக்கொண்டு கூட்டுறவு முறையில் சாகுபடிக்குக் கொண்டு வருவதற்கு தக்கபடி சட்டத்தைத் திருத்துவதற்கு சர்க்கார் முன்வருமா ? அந்த முறையில் கூட்டுறவு சாகுபடி பண்ணையை ஆரம்பிக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : That may be the policy of the hon. Member. That cannot arise by way of a question.

SRI T. IRUSAPPAN : ஆத்தூர் தாலுகாவில் இருக்கக்கூடிய தரிசு நிலங்களை கூட்டுறவு சாகுபடிக்கு எடுத்துக்கொள்வதாக சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அதிலும் குறிப்பாக ராமநாயகன்பாளையம், நாவலூர் போன்ற இடங்களிலும் கூட்டுறவு விவசாயப் பண்ணை ஆரம்பிக்கப்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : I think, I have come to the limit of my knowledge. I cannot answer individual questions. தனித்தனியாக ஒவ்வொரு சொசைட்டியைப் பற்றியும் சொல்லமுடியாது. அதற்கு விவரங்கள் வேண்டும். அப்படிக் கேட்க வேண்டுமானால் தனியாக கேள்வி போட்டால் பதில் சொல்ல முடியும்.

*Seepage (Subsidy)*

*541 Q.—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) " G.O. No. 2879, Revenue, dated 16th September 1955 " உத்திரவுப் பிரகாரம் லோயர் பவானி சமுதாய நல திட்டப் பிரதேசத்திலே நீர்க்கசிவினாலே சேதமடைந்த வீடுகளில் குடியிருந்த குடும்பங்களுக்கு வீடுகள் கட்டுவதற்காக " Cash subsidy " கொடுக்கப்படுவதற்காக ஒதுக்கப்பட்ட தொகையிலே இதுவரையில் செலவழிக்கப்படாமலிருக்கும் தொகை எவ்வளவு ?